CWA

30-5

# நான்காவதாண்டு அறிக்கை

## செட்டியார்கள் நல உரிமைச் சங்கம்

## காரைக்குடி.



38 - 39

ESTD. 1935.

ஸ்தாபிதம்:

யுவ ஹு ஆவணி மீ 3உ 19-8-35.

## சங்கத்தின் நோக்கங்கள்



(1) சமூக சிர்திருத்தம்.

(2) நகர் நலம்.

(3) நாட்டின் விடுதலை.

(4) பொதுஜன சேவை.

(5) கைத்தொழி லபிவிருத்தி

(6) உடற்பயிற்சி.

(7) கல்வி யபிவிருத்தி.

30-5

உ

வந்தேமாதரம்

# செட்டியார்கள் நல உரிமைச் சங்கம்

காரைக்குடி

# நான்காவதாண்டு அறிக்கை

**38—39**

தலைவரவர்களே!

சகோதர-சகோதரிகளே!!

இறை அருளால், இச் சங்கம், நான்காண்டுகளாகக் குறித்த கொள்கைகளுக்கேற்பத் தொண்டாற்றி உங்கள் முன்பாக இந்த அறிக்கையை மனமகிழ்ச்சியுடன் சமர்ப்பிக்கின்றது. உங்களுடைய ஆசியால் ஐந்தாவதாண்டின் சேவை மேலும் அபிவிருத்தி அடையுமென்று நம்புகின்றோம்.

சங்கம் கண்டது முதல், அங்கத்தினர்கள் சேருதல், பொருளாதாரத் துறை, கொள்கைகளை

நிறைவேற்றுதல், முதலியவைகளிற் அபிவிருத்தி அடைந்திருக்கிறது.

இச் சங்கத்தின் அங்கத்தினர்களிற் பலர். பல பொது ஸ்தாபனங்களிலும் ஸ்தலஸ்தாபனங்களிலும் பங்குகொண்டு பொதுஜன சேவை செய்து வருகிறார்களென்று உங்கள் முன் கூறும் போது இச் சங்கம் இளைஞர்களுக்கு வழிகாட்டியிருக்கிற தென்பதைப் பெருமகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

பொதுநலமாகச் செய்யும் பல தீர்மானங்கள், காரியாமிசையில் சங்கத்தார் நோக்கத்திற்கு வெற்றியாகவே பயனளித்திருப்பதிலிருந்து சங்கம் நற்பெயரை அடைந்திருக்கிறது.

ஆர்வமுள்ள பல வாலிபர்கள் கலந்து கொண்டுள்ள இந்த ஸ்தாபனமானது எதிர்கால நிர்மாணத்தை அறிந்து கூறும் தேசத் தலைவர்களின் கட்டளைப்படியும் நாட்டுக்கு நன்மையே தேடும் தேசமகாசபையின் ஆக்ஞைப்படியும் பொதுநல சேவை செய்ய உறுதி கொண்டிருக்கிறது.

வளர்ந்தோங்கி வருகின்ற இந்த ஸ்தாபனத்திற்கு இறை அருளும் மக்கள் ஆதரவும் என்றும் இருக்குமென நம்புகின்றோம்.

## நிர்வாகஸ்தர்கள்

ஸ்ரீ அள. கரு. அடைக்கப்ப செட்டியார்
தலைவர்.

,, ஆரு. பழ. சி. பழ. சிதம்பரம்
செட்டியார்.

,, பழ. வெ. ராம. வெ. ராமனுதன்
செட்டியார், உப தலைவர்.

,, கரு. சொ. பழனியப்ப செட்டியார்.

,, சித. க. கதிரேசஞ் செட்டியார்.

,, அண. அழ. அழகப்ப செட்டியார்
காரியதரிசி.

,, ஆமு. ஆரு. பழனியப்ப செட்டியார்
உதவிக் காரியதரிசி.

## நிர்வாக சபை

1. ஸ்ரீ சித. ராம. சொக்கலிங்கம்
செட்டியார்.

2. ,, மு. அரு. அண. அண்ணமலை
செட்டியார்.

3. ,, முத்து வீர. மு. அரு. உத்தமன்
செட்டியார்.

4. ,, ஆரு. பழ. சிப. மாணிக்கம்
செட்டியார்.

5. ,, மெ. சு. தி. தண்ணீர் மலையான் செட்டியார்.

6. ,, சு. மு. பழ. நாச்சியப்ப செட்டியார்.
,, சித. க. கதிரேசன் செட்டியார்.
,, அழ. அருணாசலன்

7. ,, சு. பழ. சுப்பய்யா செட்டியார்.
,, அண. அழ. அழகப்ப செட்டியார்.

8. ,, ஆரு. பழ. சி. பழ. சிதம்பரம் செட்டியார்.
,, மெ. சொ. மெய்யப்ப செட்டியார்
,, பழ. வெ. ராம. வெ. இராமநாதன் செட்டியார்.
,, நா. ராம. நாராயணன் செட்டியார்.

9. ,, சேவு. க. முத்தய்யா செட்டியார்.
,, சுப. வெ. வெங்கிடாசலஞ் செட்டியார்.

10. ,, அரு. அருணாசலன்.
,, பனா. மெ. மெ. பழ. வெங்கிடாசலஞ் செட்டியார்.

11. ,, கரு. சொ. பழனியப்ப செட்டியார்.
,, சொ. வீர. வீரப்ப செட்டியார்.

12. ,, சி. மு. அரு. மு. அருணாசலஞ் செட்டியார்.

,, ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம்
செட்டியார்.

13. ,, சுப. வெ. வெங்கிடாசலம்
செட்டியார்.

,, மெ. லெ. மெ. மெய்யப்ப
செட்டியார்.

14. ,, மெ. செ. அ. மெ. பழனியப்ப
செட்டியார்.

,, மெய. ஆ. முத்துக்கருப்பன்
செட்டியார்.

15. ,, சி. முரு. அண்ணாமலை செட்டியார்.

## அங்கத்தினர்கள் 48

ஸ்ரீ ராம. மு. நா. ராமனாதன் செட்டியார்.

,, அ௱. அ. நாராயணன் செட்டியார்.
(ஈப்போ)

,, சு. மு. பழ. நாச்சியப்ப செட்டியார்.
முனிசிபல் கௌன்ஸிலர்.

,, முரு. நா. முருகப்ப செட்டியார்.

,, கரு சொ. பழனியப்ப செட்டியார்.

,, சுப. வெ. வெங்கிடாசலம் செட்டியார்.

,, வீர. ராம. இராமனாதன் செட்டியார்.
(பினாங்கு)

,, ஆரு. பழ. சி. பழ. சிதம்பரம்
செட்டியார்.

,, சேவு. க. முத்தையா செட்டியார்.
,, வீர. மெ. வீர. கண்ணப்ப செட்டியார்
,, ஆ. மு. ஆரு. பழனியப்ப செட்டியார்.
,, குப. சிவ. பழனியப்ப செட்டியார்.
,, சு. குமு. சுப. மெய்யப்ப செட்டியார்.
(கம்பார்)
,, சு. பழ. சுப்பய்யா செட்டியார்.
,, மெ. சு. தி. தண்ணீர்மலையான் செட்டியார்.
,, அ. மு. க. மு. அள. ராமசாமி செட்டியார்.
,, சித. ராம. சொக்கலிங்கம் செட்டியார்.
,, மெ. செ. அ. மெ. பழனியப்ப செட்டியார்.
(ஹானரரி மாஜிஸ்ட்ரேட்)
,, சி. முரு. அண்ணாமலை செட்டியார்.
(முனிசிபல் கௌன்ஸிலர்)
,, அண. அழ. அழகப்ப செட்டியார்.
,, முத்து. வீர. மு. அரு. உத்தமன் செட்டியார்.
,, மெ. சொ. மெய்யப்ப செட்டியார்.
(கூம்பியோ)
,, மு. அரு. அண. அண்ணாமலை செட்டியார்.
,, ஆரு. பழ. சிப. மாணிக்கம் செட்டியார்.
,, அள. கரு. அடைக்கப்ப செட்டியார்.
,, சா. அழகப்ப செட்டியார்.
(கோலப்பிறை)

,, பள. வெ. ராம. வெ. ராமனதன்
செட்டியார்.
,, ராம. உ. ராம. உடையப்பசெட்டியார்.
,, அரு. அருணசலம்.
,, நாகு. இராமனதன் செட்டியார்.
,, ராம. பழணியப்ப செட்டியார்.
(கொழும்பு)
,, முத்து. அரு. சித. அரு. ராமசாமி
செட்டியார்.
,, சி. மு. அரு. மு. அருணசலம்
செட்டியார்.
,, அ. உ. மெ. பழணியப்ப செட்டியார்.
,, அ. தெ மு. தெ. முத்துக்கருப்பஞ்
செட்டியார்.
,, குமு. ராம. நா. இராமனதன்
செட்டியார்.
,, முரு. லெ. ராம. இராஞதன்
செட்டியார்.
,, அழ. அழகப்பன்.
,, தெ. பழ. வயி. கரு. கதி. கருப்பஞ்
செட்டியார்.
,, குப. சு. அ. மெ. சொக்கலிங்கம்
செட்டியார்.
,, சு. குமு. மெ. மெய்யப்ப செட்டியார்.
,, ஆத. பள. வெ. பள. வெங்கிடாசலம்
செட்டியார்.
,, சித. அள. நாச்சியப்ப செட்டியார்.

,, மு. அரு. சா. அருணாசலம்
செட்டியார்.
,, ராம. சொக்கலிங்கம்.
,, வி. வெ. குப்பாஞ் செட்டியார்.
,, சிமு. சிமு. அருணாசலம் செட்டியார்.
,, ராம. மெ. இராமனாதன் செட்டியார்.

## மூன்றாவது ஆண்டு விழா

சென்ற வெகுதான்ய வருஷம் ஆவணி மீ 5உ (21—8—38) ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் 4-மணிக்கு இந்நகர் நகரசபைத் தலைவரும் ஊழியன் ஆசிரியரும் தேசபக்தருமான ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் தலைமையில் நடைபெற்றது.

தேவகோட்டை முனிசிபல் கவுன்சிலர் ஸ்ரீமதி உ. கமலம் அவர்கள் கொடியேற்றி வைத்தார்கள். தேவகோட்டை முனிசிபல் உபதலைவர் ஸ்ரீ பொ. திருகூடசுந்தரம் M. A. B. L, லால்குடி போர்டு ஹைஸ்கூல் தலைமை தமிழ் பண்டிதர் ஸ்ரீ அ. மு. சரவண முதலியார் இருவர்களும் முறையே "ஒரு யோசனை" "மாது சொன்ன குழால் இளமை துறக்க வல்லர்" என்னும் பொருள்கள்பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள்.

இரவு விருந்துக்குப்பின் சாண்டோ ஸ்ரீ லெட்சுமண அய்யர் கோஷ்டியாரால் உடல் வலிமைக் காக்ஷிகள் நடைபெற்றது.

### கூட்டங்கள்

இவ்வாண்டில் 14 மகாசபைக் கூட்டங்களும்

12 நிர்வாகசபைக் கூட்டங்களும் 2 அவசர நிர்வாகசபைக் கூட்டங்களும் நடைபெற்றிருக்கின்றன. ஒவ்வொரு மாதமும் பௌர்ணமியன்று நிலா விருந்து அளிக்கப்பெற்றது.

## புத்தக நிலையம்

அங்கத்தினர்களாலும் அபிமானிகளாலும் உதவப்பெற்ற தமிழ்ப் புத்தகங்களும் ஆங்கிலப் புத்தகங்களும் இருக்கின்றன. சுங்குரும்பை ஸ்ரீ பெ. நா. மு. முத்துப்பழனியப்ப செட்டியார் J. P. அவர்களால் "மலாயாவின் தோற்றம்" என்ற தமிழ்ப் புத்தகம் ஒன்றும், சங்கத் தலைவர் ஸ்ரீ அள. கரு. அடைக்கப்ப செட்டியார் அவர்களால் 12 புத்தகங்களும் உதவப் பெற்றிருக்கின்றன.

## உபசாரம்

மாஜிக் காரியதரிசி ஸ்ரீ கரு. சொ. பழனியப்ப செட்டியார் மலாய் நாடு சென்றதை முன்னிட்டு முனிசிபல் காங்கிரஸ் கட்சித் தலைவர், ஸ்ரீ சா. கணேசன் தலைமையில் தேனீர் விருந்தும் பாராட்டுக் கூட்டமும் நடைபெற்றன. முனிசிபல் கவுன்சிலர் ஸ்ரீ அபிசீனியா பழ. நாச்சியப்பன் டாக்டர் K. R. ரத்னசாமி M. B. B. S. Z. L. O. (Veianna) ஸ்ரீ சா. அழகப்பா டாக்டர் S. S. சாரி முதலியவர்கள் விருந்தினரைப் பாராட்டி உபசாரம் கூறினார்கள்.

## பாராட்டு

சென்னை அரசாங்கத்தார் நிறைவேற்றி

யுள்ள மலையாள ஆலயப்பிரவேச மசோதாவை முழு மனதுடன் பாராட்டியும் சென்னை மாகாணத்தின் கல்வி மந்திரியாக நியமிக்கப்பட்டிருக்கும் கனம் வார்க்கி அவர்களைப் பாராட்டியும், சிறுபான்மை சமூகத்தினரான கிருஸ்தவர்களில் ஒருவராயும் கலாசாலை ஆசிரியராக இருந்து அனுபவப்பட்டவருமான ஒருவரை கல்வி மந்திரியாக நியமித்த நமது பிரதம மந்திரி கனம் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாரைப் பாராட்டியும், இராமனாதபுரம் ஜில்லா போர்டுக்கு போட்டியன்னியில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆ. தெக்கூர் ஸ்ரீமதி சேதுக்காசி ஆச்சி அவர்களைப் பாராட்டியும், இந்நகர் பெஞ்சுக் கோர்ட்டில் ஹானரரி மாஜிஸ்ட்ரேட்டாக நியமிக்கப்பெற்ற ஸ்ரீமதி சு. ப. திருநெல்லையாச்சி, மு. மரகதவல்லி யம்மாள் (மாதர் மறுமணம் ஆசிரியை) சங்க அங்கத்தினர் ஸ்ரீ மெ. செ. அ. மெ. பழனியப்ப செட்டியார் ஆகியவர்களைப் பாராட்டியும், தமிழ் மாகாணக் காங்கிரஸ் கமிட்டித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றிருக்கும் ஒபந்தூர் ஸ்ரீ பி. ராமசாமி ரெட்டியாரைப் பாராட்டியும், தண்ணீர்ப் பந்தல் நடத்துவதற்கு முனிசிபாலிட்டியாரிடம் ஒப்புக்கொண்டிருக்கும் ஸ்ரீ செ. ராம. பள. நாராயணன் செட்டியார் அவர்களைப் பாராட்டியும், ஜட்கா ஸ்டாண்டும் கால்நடைகளுக்குக் குடிதண்ணீர்த் தொட்டியும் கட்டுவதற்கு முனிசிபாலிட்டியாரிடம் ரூ. 750 நன்கொடை உதவிய ஸ்ரீ பனை மெ. மெ. பழனியப்ப செட்டியார் அவர்களைப் பாராட்டியும், மதுரை, தஞ்சாவூர், குற்

ஞலம், திருச்சி, அழகர்கோவில், முதலிய ஊர்களில் ஹரிஜனங்களைக் கோவிலுக்குள் தரிசனத்திற்கு அனுமதித்ததையும் அதற்குக் காரணமாகத் தொண்டுசெய்தவர்களையும் கோவில் நிர்வாகிகளையும் பாராட்டியும் ஆலயப் பிரவேச சம்பந்தமாக சமயமறிந்து அவசரச் சட்டம் நிறைவேற்றிய சென்னை அரசாங்கத்தாரைப் பாராட்டியும் செட்டிமார் நாட்டில் முதன் முதலாக ஹரிஜனங்களைக் கோவிலுக்குள் அனுமதித்த காரைக்குடி ஸ்ரீ மெ. செ. ராமசாமி செட்டியார் அவர்களையும் அதற்குக் காரணமாகவிருந்த முனிசிபல் கவுன்சிலர் அபிசீனியா நாச்சியப்பன் அவர்களையும் பாராட்டியும் தீர்மானங்கள் நிறைவேற்றி உரியவர்கட்குக்கடிதங்கள் மூலம் அனுப்பப்பெற்றன.

## வேண்டுகோள்

சாரதாச் சட்டத்திற்கு இணங்க மணங்களை நடத்திவைக்கும்படி பொது ஜனங்களையும் குறிப்பாக நகரத்தார் சமூகத்தினரையும் கேட்டுக்கொள்ளுகிறதென்றும், அரியக்குடியிலிருந்து இந்நகர் ரயில்வேஸ்டேஷன் ரோடுவரை புதிதாக ரோடுபோடுவதாய்த் தீர்மானித்திருப்பதை விரைவில் ரோடு அமைக்கும்படி ராமனுதபுரம் ஜில்லா போர்டாரைக் கேட்டுக் கொள்கிறதென்றும், இந்நகர் முத்துப்பட்டணம் சேர்வைக்காரர் ஊருணிக்குத் தென்புரத்தில் செட்டியார்களால் கட்டப்பெற்றிருக்கும் மயானம் எப்பொழுதும் செட்டியார்களுக்காகவே ஒதுக்கி இருந்ததை

கவர்ன்மெண்டார் எல்லா சமூகத்தாருக்கும் பொதுவாகஇருக்கவேண்டுமென்று அறிவித்திருப்பதை வழக்கமாக செட்டியார்களுக்கு ஒவ்வொரு நகரிலும் தனித்தனியே மயானங்கள் இருந்துவருவதுபோல் இந்த மயானத்தையும் முன்போலவே முத்துப்பட்டணம் நகரத்தார்களுக்கு ஒதிக்கிக் கொடுக்க வேண்டுமென்று நகரசபையாரையும் சென்னை அரசாங்கத்தையும் கேட்டுக்கொள்ளுகிறதென்றும் இந்நகரிலுள்ள கோவில்களை ஹரிஜனங்களுக்குத் தரிசனம் செய்யத் திறந்து விடும்படி. கோவில் சொந்தக்காரர்களைக் கேட்டுக் கொள்ளுகிறதென்றும், தீர்மானங்கள் நிறைவேற்றி வேண்டிக்கொள்ளப் பெற்றன.

[சாரதாச் சட்டத்தை மீறிக் கல்யாணங்கள் தற்பொழுது நடப்பதில்லை. சட்டசம்பந்தமான விபரங்களைப் பெற்றோர்கள் நன்கு தெரிந்து மீறிச் செய்யக்கூடாதென்பதை உணர்ந்திருக்கிறார்கள்.]

[அரியக்குடி—காரைக்குடி ரயில்வேஸ்டேஷன் ரோட்டை இன்னும் ஜில்லா போர்டார் போட்டு முடிக்கவில்லை. இந்த ரோடு போடுவதால் அரியக்குடி மகாஜனங்களுக்கு மிகுந்த நன்மையாக யிருக்கும்.]

[மயான விஷயம் சமரசமாக முடிக்க இருந்தும் முடிவுபெறவில்லை. அரசாங்கத்தின் அனுமதி பெற்றுக்கொண்டு நகரசபையார் இதைச் சமரசமாக முடித்துவைப்பார்கள் என்று எதிர் பார்க்கப்படுகிறது.]

[சித்திவிநாயகர் கோவில் ஒன்று திறந்து விடப்பட்டது. இன்னும் பல கோவில்கள் இதை யொட்டி திறந்துவிடப்படுமென எதிர்பார்க்கப் படுகிறது.]

## நகர் நலம்.

கல்லுக்கட்டி ஊருணியை விரைவில் கட்டி முடிக்கும் படி நகரசபையாரைக் கேட்டுக் கொள்ளப்பட்டது.

கல்லுக்கட்டி ஊருணிசம்பந்தமாக நகரசபை யார் எடுத்துக் கொண்ட வேலையை நடத்தவிடா மல் அரசாங்கத்தார் தடைஉத்தரவு செய்திருப் பதை ரத்துச் செய்து நகரசபையார் செய்த தீர் மானத்தின்படி தொடர்ந்து ஊருணிவேலையை நடத்துவதற்கு அனுமதியளிக்கவேண்டுமாய் சுகாதார மந்திரி அவர்களையும் ஸ்தலஸ்தாபன மந்திரி அவர்களையும் கேட்டுக்கொள்ளப்பெற்றது

[அரசாங்கத்தார் நகரசபையாரின் முடிவுக்கு இணங்கி உத்தரவிட்டுப் பின்னால் நியாயஸ்தலத் தில் விவகாரங்கள் நடந்து நகர சபையார் முடி வுக்கே தீர்ப்பளிக்கப்பட்டும் இந்த சந்தர்ப்பத்தில் பூராவிவகாரமும் தீர்ந்துவிட்ட தென்றாலும் ஊருணி வேலை நடக்காதிருப்பது பொது ஜனங் களுக்கு மிகுந்த கஷ்டத்தைக் கொடுப்பதோடு அபாயங்கள் ஏற்படவும் ஏதுவாகயிருந்து வருகிறது.

[நகரத்தில்சிலநாட்கள் வெட்டுக்குத்தும்பெருங் களவுகளும் நடந்து கொண்டிருந்ததை நகர அதி

காரிகளுக்கும் மேல் அதிகாரிகளுக்கும் தெரியப் படுத்தி வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளும்படி அறிவிக்கப்பெற்றது. [போலீசார் கவனிப்புச்சிறிது இருந்தாலும் நகரத்திலுள்ள இந்துஸ்தான் சாரணர் சங்கத்தின் பாரதி படையினர் இரவுகாலத்தில் லோந்து சுற்றி நகரில் பலபாகங்களிலும் விடியும்வரை காவல் புரிந்ததினால் களவுகள் கலகங்கள் பெரும்பாலும் இல்லாது நீங்கியது.

[நகரசபைக்கமிஷனர்பாம்பேஷோவுக்கு அனுமதி கொடுத்து நடந்து வந்ததை அதனால் பல தொத்து நோய்கள் ஏற்படக்கூடுமென்பதையும் பொது ஜனங்களுடைய பணங்கள் அநியாயமாய் நஷ்டப் படுமென்பதையும் உத்தேசித்து ஷேவாவை விரைவில் நிறுத்தும்படி நகர சபையாரைக் கேட்டுக் கொள்ளப்பட்டது [நகர சபையார் மீண்டும் லைசென்சு கொடுக்காது விரைவில் நிறுத்திவிட்டார்கள்]

நியூ டவுன் நகரசபையார் ஒப்புக்கொண்டு விட்டபடியால் ரோடுகளை ஒழுங்குசெய்து பாலங்களை விரைவில் கட்டிக்கொடுக்க வேண்டுமென்று காரைக்குடி நாட்டார் ரிசிவர் அவர்களைக் கேட்டுக்கொள்ளப்பட்டது.

[ரோடுகள் பெரும்பாலும் ஒழுங்குசெய்து பாலங்களும் கட்டிமுடிக்கப்பெற்று வருகின்றன]

இந்நகரில் மழை இல்லாததினாலும் தண்ணீர்க் கஷ்டம் அதிகமாக யிருப்பதாலும் ஏற்கனவே நகரசபையார் செய்த திட்டப்படி விரை

வில் தண்ணீர் வசதி செய்து தரும்படி நகரசபை யாரைக் கேட்டுக்கொள்ளப்பெற்று அரசாங்கத் தாருக்கும் தெரிவித்துக்கொண்டிருக்கிறது.

[தண்ணீர் சப்ளை தொட்டி (Reservoir) கட்டியிருக்கும் இடம் பாத்தியா பாத்தியத் தகராறை நகரசபையார் ஒரு வழியாக சமாதானமாக முடித்தும் மேலதிகாரிகள் ஒப்புக்கொள்ளாததினால் ஆயிரக்கணக்காய்ச் செலவுசெய்து தண்ணீரைத் தேக்கியும் ரூ 30,000 செலவு செய்து தொட்டியைக் கட்டியும் (Water Tank) பொது ஜனங்களுக்கு உபயோகமில்லாதிருந்து வருகிறது. தொட்டியில் தண்ணீரைவிடாது மெயின் குழாய் வழியாகவே கல்லுக்கட்டியில் ஒரேயிடத்தில் பலகுழாய்கள் வைத்துத் தண்ணீர் சப்ளை செய்து வருவது தற்காலப் பயனாகவிருக்கிறது.]

தண்ணீர்க் கஷ்டத்தை முன்னிட்டு நகரசபையார் முன் வருஷம்போல் பல முக்கிய இடங்களில் கோடைகாலத் தண்ணீர்ப்பந்தல்கள் ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்ளப் பட்டது.

[பல இடங்களில் தண்ணீர்ப் பந்தல்கள் ஏற்படுத்தப்பெற்று கோடைகாலத்தில் பொதுஜனங்களுக்கு மிகவும் உபயோககரமாயிருந்தது.]

## பொதுநலம்

இவ்வூர் ரயில்வே ஸ்டேஷனில் சிற்றுண்டி சாப்பாடு வசதியில்லாதிருப்பது பிரயாணிகளுக்கு மிகுந்த கஷ்டத்தைக் கொடுப்பதால்

ஏனைய ஸ்டேஷன்களில் S.I.R. மானேஜ்மெண்டில் நடத்துவதைப்போல் ஓர் போஜனசாலை நடத்த வேண்டுமென்று ரயில்வே அதிகாரிகளுக்குத் தெரிவிக்கப்பட்டது.

[இது சம்பந்தமாய் கவனிப்பதாக ரயில்வே அதிகாரிகள் தெரிவித்திருக்கிறார்கள். ஆனால் இன்னும் இவ்வசதி செய்யப்படவில்லை.]

இன்கம்டாக்ஸ் சட்டங்களைத்திருத்திப் புதிய முறையில் அமைத்திருக்கும் விபரத்தைச் செட்டிமார் நாட்டில் லக்ஷக்கணக்காய் வரி கொடுப்போர் இருப்பதால் அவர்களுக்குத் தெரிய வேண்டிய அவசியத்தை முன்னிட்டு செட்டிமார்நாட்டுப் பகுதியில் தலைநகரான காரைக்குடியிலிருந்து வெளிவரும் 'ஊழியன்,' 'குமரன்,' 'செட்டிநாடு' 'வில்வபந்து' முதலிய பத்திரிகைகளில் திருத்தப்பட்ட சட்டத்தின் விவரங்களைப் பிரசுரிக்க வேண்டுமென்று சென்னை இன்கம்டாக்ஸ் கமிஷனர் அவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டது.

[ஏற்கனவே கெஜட்டில் பிரசுரித்திருப்பதால் குறிப்பிட்ட பத்திரிகைகளில் தாங்கள் பிரசுரிப்பதற்கில்லை யென்றும் பத்திரிகைக்காரர்களே பிரசுரித்துக் கொள்வதற்கு தங்களுக்கு ஆட்சேபனையில்லை யென்றும் மதராஸ் இன்கம்டாக்ஸ் கமிஷனரிடமிருந்து பதில் வந்திருக்கிறது.]

காரைக்குடியில் நோட்டரி பப்ளிக் ரிஜிஸ்டரார் தேவை யென்று முன்னாண்டில் அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொள்ளப்பெற்று, பல ரிமைண்டர்கள் அனுப்பப் பெற்றன. சமீபகாலத்

தில் காரைக்குடி. சப்ரிஜிஸ்டரார் அவர்களுக்கு நோட்டரி பப்ளிக் பவர் கொடுத்திருப்பதாக அர சாங்கத்தார் தெரிவித்திருக்கிறார்கள்.

## அனுதாபம்

அய்யலூர் ரயில் விபத்தில் பல மக்கள் உயிர் துறந்தமை குறித்தும், பர்மா கலகத்தில் இந்திய மக்கள் பலர் உயிர் துறந்தமை குறித்தும், துருக்கி நாட்டுத் தலைவர் கெமால் அடாடர்க் உயிர் துறைந்தமை குறித்தும், சிறந்த தேச பக்தரும் தேவகோட்டை முனிசிபல் கவுன்சிலருமான ஸ்ரீ டைரி ராம. அருணாசலன் அகால மரணமடைந்தமை குறித்தும், ஜனுப் மௌலான ஷவுகத் அலி உயிர் துறந்தமை குறித்தும், சென்னை அரசாங்க நீதிமன்றம்—சிறைச்சாலை மந்திரி கனம் ராமன் மேனன் அகால மரணமடைந்தமை குறித்தும், சங்க மாஜி காரியதரிசி ஸ்ரீ கரு. சொ. பழனியப்ப செட்டியாரின் மனைவி ஸ்ரீமதி மீனாக்ஷி ஆச்சி அகால மரணமடைந்தமை குறித்தும், சங்க உதவிக் காரியதரிசி ஸ்ரீ ஆ. மு. ஆரு. பழனியப்ப செட்டியாரின் தாயார் ஸ்ரீமதி லெட்சுமி ஆச்சி உயிர் துறந்தமைகுறித்தும், அனுதாபத் தீர்மானங்கள் செய்யப்பெற்று அன்னார்களின் குடும்பத்தார்களுக்குக் கடிதமூலம் தெரிவிக்கப்பட்டன. [அய்யலூர் ரயில்விபத்து சம்பந்தமாகவும் பர்மாவில் கலகத்தால் இந்தியர்கள் படும் இன்னல்களைப் பற்றியும் மத்திய அரசாங்கத்தாருக்கும், சென்னை அரசாங்கத்தாருக்கும், பர்மா அரசாங்கத்தாருக்கும் பரிகாரம் தேடும்படி தெரிவித்துக்கொள்ளப்பட்டன.

## கண்டனம்

ராஜ்கோட் சமஸ்தான சர்க்கார்ப் போக்கை முழுமனதுடன் கண்டிக்கப் பெற்று கண்டிப்பதின் காரணமாக அன்றைய மகாசபைக் கூட்டத்தை நடத்தாமல் ஒத்திவைக்கப் பெற்றது. [உண்ணுவிரதம் அனுஷ்டித்த நமது மாபெரும் தலைவர் மகாத்மா காந்தியடிகளின் உண்ணுவிரத நோக்கம் வெற்றிபெற வேண்டுமெனவும் அன்னார் உயிருக்கு எவ்வித ஹானியும் ஏற்படக்கூடாதெனவும் கடவுளை பிரார்த்திக்கப் பெற்றது]

## போட்டிப் பந்தயம்

6—7—39 முதல் 23—7—39 வரையில் சங்கத்தின் ஆதரவில் பாட்மிண்டன், டபிள்ஸ் அண்டு சிங்கிள்ஸ் டோர்னமெண்ட் நடத்தப்பெற்றது. டபிள்சில் பத்தொன்பது டீம்களும், சிங்கிள்சில் 16 டீம்களும் கலந்து கொண்டன. டபிள்சில் வின்னர்களாக விவேகானந்தா டீமில் விளையாடிய சங்கத்தின் அங்கத்தினர் ஸ்ரீ அரு. அருணாசலனும் புதுவயல்டாக்டர்ஜேம்ஸூம், ரன்னர்களாக தேவகோட்டை எக்ஸெல்ஸியர் டீமில் விளையாடிய ஸ்ரீ M. நடராஜன் செட்டியாரும் N. அருணாசலம் செட்டியாரும், சிங்கிளசில் வின்னராக சங்க அங்கத்தினர் ஸ்ரீ அரு. அருணாசலமும் ரன்னராக ஸ்ரீ ராம. சுப்பையாவும் வெற்றி பெற்றார்கள்.

23—7—39-ல் தேவகோட்டை ஹானரரி மாஜிஸ்டிரேட்டும் காரைக்குடி ஜில்லா ஹரிஜன

சேவா சங்கக் காரியதரிசியுமான ஸ்ரீமதி கமலா சிவசுப்ரமண்யம் B A. அவர்கள் தலைமையில் வெற்றியாளர்களுக்கு முறையே பெரிய சிறிய வெள்ளிக் கோப்பைகள் பரிசளிக்கப்பட்டன.

## சுகாதாரச் சட்ட விளக்கம்

முனிசிபாலிட்டியார் வேண்டுகோளின்படி 26--3—39ல் சங்க நிலையத்தில் முனிசிபல் காங்கிரஸ் கட்சித் தலைவர் ஸ்ரீ சா. கணேசன் தலைமையில் சுகாதாரச் சட்ட விளக்கக் கூட்டம் நடத்தப் பெற்றது.

முனிசிபல் கமிஷனர் T. புருஷோத்தம், முனிசிபல் ஹெல்த் ஆபீஸர் சுந்தரராஜ நாயுடு டாக்டர் K. R. ரத்னசாமி M. B. B. S; Z. L. O; (Veinna) முதலியவர்கள் புதிய சட்டத்தைப்பற்றி விரிவாக எடுத்துரைத்தார்கள். 22—8—39ல் ஒரு கூட்டம் நடத்தப்பெற்றது. முனிசிபல் ஹெல்த் ஆபீசர், சானிடரி இன்ஸ்பெக்டர்கள் பேசினார்கள்.

## விளையாட்டுகள்

நமது சங்கத்தில் பாட்மிண்டன், காரம் போர்டு, இன்னும் பல விளையாட்டுகள் நடைபெற்று வருகின்றன. அங்கத்தினர்களும் அபிமானிகளும் வந்து விளையாடி வருகின்றார்கள்.

## பத்திரிகைகள்

அடியிற்கண்ட 16 பத்திரிகைகள் சங்கத்

திற்கு வரவழைக்கப் படுகின்றன. அவைகள் யாவும் சங்க அங்கத்தினர்களால் இலவசமாக உதவப்பெற்று வருகின்றன.

| பத்திரிகை. | பதிப்பு. | நன்கொடையாளர். |
|---|---|---|
| தினமணி | தினசரி | சித. ராம. சொ. |
| சுதேசமித்திரன் | ,, | அள. கரு. |
| Hindu | ,, | ஆரு.பள.சி,ப.மா. |
| ஊழியன் | வாரப்பதிப்பு | ஆ. மு. ஆரு. பள. |
| குமரன் | ,, | அள. கரு. |
| செட்டிநாடு | ,, | சிமு.அரு.மு.அரு. |
| விஸ்வபந்து | ,, | சி. ந்ரு. அண. |
| ஹனுமான் | ,, | கரு. சொ. பள. |
| ஆனந்தவிகடன் | ,, | ஆரு. பள. சி. பள. சித. |
| சுதேசமித்திரன் | ,, | சேவு. க. மு. & வீர. ராம. |
| தமிழ்மணி | ,, | நா. க. மெ. சுப. |
| சிவாஜி | ,, | சித. க. |
| சிவநேசன் | மாதம் | அள. கரு. |
| மாதர்மறுமணம் | ,, | அண. அள. |
| நல்வழி | ,, | ஆரு.ஆ.ராம.சொ. |
| ஜோதி | ,, | ஆ. மு. ஆரு. பள. |

## சப்-கமிட்டிகள்

கரு. சொ. பள. வுக்கு உபசாரவிருந்து நடத்துவதற்கு ஒரு கமிட்டியும், பாட்மிண்டன் டோர்ணமெண்ட் நடத்த ஒரு கமிட்டியும், நாகநாத புரம் ஊருணி விஷயமாய் நகரசபையாரிடம் விசாரித்து முடிவு செய்ய ஒரு கமிட்டியும், ஆண்டு விழா வேலைகளைக் கவனிக்க ஒரு கமிட்டியும், நிர் வாக சம்பந்தமாய் கவனிக்க பல உப கமிட்டிக ளும், நியமிக்கப்பெற்று எல்லா உப கமிட்டிகளும் திருப்திகரமாக வேலைகளைச் செய்து முடித்திருக் கின்றன.

## பெரியார்கள் விழாவும் பணவுதவியும்

காந்தி ஜயந்தி, பாரதிவிழா, கம்பர்விழா முதலியவைகளுக்குக் கமிட்டியாரிடம் பொரு ளுதவி செய்து விழாக்களில் சங்கத்தாரும் கலந்து கொண்டார்கள்.

## நன்கொடை

அங்கத்தினர்களிடம் மூன்றாவது ஆண்டு விழாவுக்கு ரூ.81-ம் மாஜிக் காரியதரிசி கரு. சொ. பழ. விருந்துக்கு ரூ. 28-8-0ம் பாட்மிண்டன் டோர்ணமெண்டுக்குரூ.22-ம் நன்கொடைகளாக வாங்கப்பட்டன.

## நன்றி அறிவித்தல்

சங்க வளர்ச்சியில் கவனம் செலுத்தி ஆத ரித்துவரும் அங்கத்தினர்கட்கும், அபிமானம்

கொண்டுள்ள அன்பர்கட்கும், கூட்டங்கட்குத் தலைமைதாங்கிய பெரியார்கட்கும், உபந்யாசங்கள் செய்த அறிஞர்கட்கும், விஜயம் செய்த சகோதர சகோதரிகட்கும், நன்கொடை தந்துதவிய அங்கத்தினர்கட்கும், நமது நிகழ்ச்சிகளை அவ்வப்போது பிரசுரித்துவரும் பத்திரிகாசிரியர்கட்கும் சங்கத்திலிருந்து அனுப்பிய தீர்மானங்களை ஏற்று வேண்டுவன செய்தவர்கட்கும், எங்களது மனமார்ந்த நன்றியறிதலையும் வந்தனத்தையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

அன்புள்ள

அண. அழ. அழகப்பசெட்யார்
காரியதரிசி

ஆமு. ஆரு. பழணியப்பசெட்டியார்
உதவிக்காரியதரிசி

நியூடவுண்
காரைக்குடி
பிரமாதி௵
ஆவணி-ஸ்ரீ 25௳

செட்டியார்கள் நல
உரிமைச் சங்கம்
10-9-39



## வெகுதானிய-ஸு ஆவணிமீ 1௳ முதல் பிரமாதிஸு ஆவணிமீ 15௳ வரை வரவு செலவு கணக்கு விபரம்.

| வரவு | ரூ. | அ. | பை. | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|---|---|
| சென்றவருட இருப்பு | 34 | 4 | | | | |
| ஆதாயம் .... .... | | 4 | | | | |
| நன்கொடை .... .... | 165 | 8 | | | | |
| பிரவேசக் கட்டணம் | 57 | | | | | |
| சந்தா .... .... | 547 | | | | | |
| வீட்டு வாடகைக்கு முன் பணம் | 8 | 12 | | | | |
| பற்று | | | | | | |
| பத்திரிகை சந்தா .... | | | | 2 | | |
| அச்சுக்கூலி .... .... | | | | 26 | 5 | 6 |
| விளையாட்டுச் செலவு .... | | | | 73 | 2 | 9 |
| நிலாபோஜனம் .... | | | | 123 | 8 | 6 |
| உபசார விருந்து .... | | | | 28 | 12 | |
| ஸ்டேஷனரி ஸ்டாம்பு பொருளுதவி சில்லரை முதலியன .... | | | | 64 | 10 | |
| மூன்றாவது ஆண்டுவிழா | | | | 120 | 6 | 6 |
| சாமான் கொள்முதல் | | | | 51 | 2 | 3 |
| கட்டிட வாடகை .... | | | | 115 | 4 | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| பியூன் சம்பளம் .... | | | | 78 | 8 | |
| இடம் கொள்முதல் .... | | | | 3 | | |
| வரவேண்டிய இனங்களில் | | | | 56 | 7 | |
| இருப்பு ... .... | | | | 69 | 9 | 6 |
| | 812 | 12 | 0 | 812 | 12 | 0 |

அண. அழ. அழகப்பசெட்டியார்,
காரியதரிசி.

சிட்டை, குறிப்பு, பேரேடு, வவுச்சர்கள் தணிக்கை செய்தோம், கணக்குகள் சரியாக வைக்கப்பட்டுள்ளன.

பிரமாதி-௵
ஆவணி-௴
17௳
2—9—39.

வீர. மெ. வீர. கண்ணப்ப
செட்டியார்,
குப சிவ. பழனியப்ப செட்டியார்,
கணக்குப்பரிசோதகர்கள்.



ஊழியன் பிரஸ், காரைக்குடி.

## பாரதி! பாரதி!! பாரதி!!!

## நம் கவிச் சக்ரவர்த்தி திருநாள்

## 11—9—39

பாட்டுக் கொருபுலவன் பாரதியடா-அவன்
பாட்டைப் பண்ணோடொருவன் பாடினனடா
கேட்டுக் கிறுகிறுத்துப் போனேனேயடா-அந்தக்
கிறுக்கில் உளறுமொழி பொறுப்பாயடா.

சொல்லுக்குச் சொல்லழகு மேறுமேயடா-கவி
துள்ளு மறியைப் போலே துள்ளுமேயடா
கல்லும் கனிந்துகனி யாகுமேயடா-பசுங்
கன்றும் பாலுண்டிடாது கேட்குமேயடா.

தேனும் தினையும் பாலில் உண்ணலாமடா-மிகத்
தித்திக்கும் முக்கனியும் உண்ணலாமடா
கானக் குழலிசையும் கேட்கலாமடா-ஊடே
களிவண்டு பாடுவதும் கேட்கலாமடா.

நாட்டு மொழியுமவன் பாட்டினிசையில்-மிக்க
நல்லகற் கண்டினிமை சொட்டுமேயடா
எட்டிலிம் மந்திரந்தான் கண்டவருண்டோ-ஈதவ்
ஈசன் திருவருளென் றெண்ணுவாயடா.

உள்ளந் தெளியுமொரு பாட்டிலேயடா-மிக்க
ஊக்கம் பிறக்குமொரு பாட்டிலேயடா
கள்ளின்வெறி கொள்ளுமோர் பாட்டிலேயடா—
[ஊற்றுய்க்
கண்ணீர் சொரிந்திடுமோர் பாட்டிலேயடா.

—கவி தேசிக விநாயகம்பிள்ளை.

## அக்டோபர் 2-ம் நாள்

# அடிகள் திருநாள்



இந்தச் சமயத்தில் நான் இந்தியாவின் சுதந்திரத்தைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கவில்லை. அது வந்துவிடும். ஆனால் இங்கிலாந்தும் பிரான்சும் விழ்ந்தோ, அல்லது இவைகள் ஜர்மெனியை நாசப் படுத்தி ஒடுக்கியபின் வெற்றிபெற்றோ நமக்குச் சுதந்திரம் வந்து என்ன பிரயோஜனம்!

•

ஆர்க்கம் என்பது சிறிதுகூட இருக்கக்கூடாது. அதனால் நம் முன்னேற்றம் தடைப்படும். தவிர நிரபராதிகளான பலர் வீணே உயிரிழக்கவும் நேரிடும். ஆதலின் எல்லாவற்றிற்கும் மேலாக நம் தேசமெங்கும் ஒழுங்கும் அமைதியும் நிலை நிற்குமாக.

•

உலகினர் அனைவரிடமும் நேசமாக இருக்க வேண்டும். இதுவே நமது போராட்டத்தின் கருத்து. அஹிம்சா தருமமானது மனிதரிடையே உதித்துவிட்டது. அது நிலைத்திருக்கும். இதுவே உலக சமாதானத்துக்கு உபாயம்.

—மகாத்மா காந்தியடிகள்.